உ

சிவமயம்

மதராஸ்

பெரியபுராண

அறுபத்துமூன்றுநாயன்மார்களில் ஒருவராகிய




# சிறுத்தொண்டநாயனார்

## திவ்யசரித்திரக் கீர்த்தனை.

இஃது,

கோகுலாபுரம்.

மலையானந்தசுவாமிகளினது

மாணாக்கரிலொருவராகியும்

தி-சோமசுந்தரமுதலியாரவர்கள்

மைத்துனருமாகிய

**வே - அருணாசலமுதலியாரால்**

இயற்றப்பட்டு.

தருமவரம்.

சரபையபத்தர் - சகோதரராகிய

பங்காருபத்தரவர்கள் - குமாரர்,

**பாலகிருஷ்ணபத்தரவர்களால்**

பூமாதுவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம்பதிப்பு - காபி - 1000.

1885.



பாருல்வுமறையோது விப்பிரர்முதற்சொலும்
பாவலர்களாலும்விண்வாழ்
ப்ருதிமகிநாரதா தியர்கருடகாந்தருவர்
பரவும்வித்யாதாருடன்
பைந்துளவமாலையணிமாலறிதுயிற்கொளும்
பண்புசேர்சேடனலும்
பன்னவரிதென்னிலோ சுப்பராயன்சீர்த்தி,
பகரவல்லவரியாவரோ.



உ

சிவமயம்.

## விளம்பரம்.



இப்புத்தகம் வேண்டுபவர்கள் சென்னைமாநகரம் பெத்துநாயக்கன்பேட்டை நெல்லுமண்டி வீதிக்கடுத்த பரமசிவசெட்டி வீதியில் மேலண்டைவாடை ( 3 ) வது கதவிலக்கமுள்ள வீட்டிலிருக்கும் தருமவரம் - சரபையபத்தர் சகோதர ராகிய - பங்காருபத்தர் குமாரர் - பாலகிருஷ்ண பத்தரிடத்திலும் ம-ா-ா-ஸ்ரீ. மு - சுப்பராயாசாரியா ரவர்களால் நடாத்திவரும் நாடகாலங்காரப் பந்தரிலும் விலைகொடுத்துப் பெற்றுக்கொள்ளலாம்.

இங்வனம்.

 த. பாலகிருஷ்ணபத்தர்.



உ

சிவமயம்.

# சிறுத்தொண்டநாயனார்

## சரித்திரச்சுருக்கம்.

திருச்செங்காட்டங்குடியில் மாமாத்திர பிராமணகுல சிரேஷ்டராய்த் திருவவதாரஞ்செய்து பரஞ்சோதியாரென்னுந் திருநாமம்பெற்றுத் தங்கள் குலத்துக்குரிய ஆயுள்வேதமுதலிய வேதசாஸ்திரங்களுந் தனுர்வேதமு முணர்ந்து சோழராஜனிடத்தில் மந்திரித்தொழில்பூண்டு சிவநேசமுஞ் சிவனடியார்களுக்கு அன்புடன் திருவமுதுபடைக்கும் நியதியு முள்ளவராயிருப்பவர் அரசனுக்காக வடதேசத்திற் சேனையுடன் சென்று பகைவனைவென்று அங்கிருக்கும் நிதிமுதலான பொருளுங்கொண்டுவர அரசன்கண்டு மகிழ்ந்து மந்திரிகளாலிவர் சிவநேசமுள்ளவரென்று அறிந்து அவருக்கு மிகுந்த திரவியமுதலானவை கொடுத்துத் தேவருடைய கருத்தின்படி தொண்டுசெய்துகொண் டிருக்கலாமென்று விடைகொடுக்க அன்றுமுதல் முன்னிலும் அதிகமாகிய அன்புள்ளவராய் வெண்காட்டுநங்கை யென்னு மனைவியாருடன் இல்லறம்வழுவாமல் நடத்திச் சிவனடியார்களுக்கு அமுதுபடைப்பது நியதியாகக்கொண்டு தொண்டர்களுக்கு மிகச் சிறியராயிருப்பதினால் சிறுத்தொண்டரென்னும் பெயரும்பெற்றுப் பரமசிவத்தின் திருவருளால் சீராளனென்னும் புத்திரனையீன்று மகிழ்ந்திருக்கும் நாளில் ஒருநாள் அமுது படைப்பதற்குச் சிவனடியார்கள் கிடையாமையால் நாயனார் தேடிச்செல்லச் கயிலாயபதியானவர் யிவருடைய அன்பினை வெளிப்படுத்தத் திருவுளங்கொண்டு வயிரவவேடந் தாங்கி யவர் திருமாளிகையில் வந்து நாயனாரில்லாமையினால் கணபதீச்சரமென்னும் ஆலயத்திலிருக்கும் ஆத்திமரத்தின் கீழ்ப்போய் வீற்றிருக்க நாயனார் கேள்விப்பட்டுவந்து பணிந்து திருவமுதுகொள்ள வரும்படி பிரார்த்தித்தனர் வயிரவமூர்த்தியானவர் நமக்கு அமுதூட்ட வும்மாலாகாது ஏனெனில் நாம் ஆறுமாதத்துக் கொருநாள் பசுப்படுத் துண்பதென்ன நாயனார் அடியேனிடத்தில் பசுக்களு முண்டென்ன நாமுண்பது நரப்பசு அது அங்கப்பழுது யாதொன்றுமின்றி ஐந்துவயதுள்ளதா யிருக்கவேண்டும் அதனைத்

# சிறுத்தொண்டநாயனார்.

னாய்பிடிக்கத் தாதையுமகிழ்ச்சியுடனிரிந்து சமைத்தா லுண்பதெ
ன்ன அதற்கிசைந்து வந்து வெண்காட்டு நங்கையுடன் சொல்ல அ
பர் யெவ்வளவு திரவியங்கொடுத்தாலு மிவ்வாறு புத்திரனைக் கொடு
ப்பார்களோவென்று வணங்கினர் நாயனா ரவரை நோக்கிப் புத்திர
னைத் தருவார்களே யானாலு மனமகிழ்ந்து அரியார்கள் ஆதலால் நாமு
ழையும்படி நீபயந்த மைந்தனை யழைப்போமென்ன அவர் யெவ்வாறு
னாலுந் தம்முடைய கணவனார் மனமகிழச்சியினால் முகமலர்ச்சியுள்ள
வராயிருக்கக் காணவேண்டுமென்னு மன்பினால் ஒத்துக்கொள்ள நாய
னார்சென்று பள்ளிக்கூடத்திலிருந்து புத்திரனைத் தோளிலெடுத்துக்
கொண்டுவர மனைவியார் வாங்கிக்கொண்டு ஸ்நானஞ்செய்வித்துக் கண
வனார் கையிற்கொடுத்துப் பாண்டங்களை சுத்திசெய்து மனைவிடத்
திற் செல்ல நாயனாரும் புத்திரனுடனவ்விடத்திற் சென்று வயிரவ
மூர்த்தி சொன்னபடிசெய்து சிரசு கறி யமுதுக்காகாதென்று சந்த
னத்தாதியென்னுந் தாதி கையிற்கொடுத்து மறைத்துவிடச்சொல்லி மற்
றைய உறுப்புகளைச் சிறுகளை அறுவகைருசியுடன் சமைத்து அன்ன
மும் சமைத்துக் கணவனாருக்குச் சொல்ல அவர்மகிழ்ந்து சென்று
வயிரவமூர்த்தியைப் பணிந்து திருவமுது கொள்ள வரும்படி பிரார்த்
திக்க அவர் தொண்டர் திருமாளிகைக் கெழுந்தருளினர் அவர்கள்
வயிரவமூர்த்தியின் திருவடிகளை விளக்கி யன்னீரைத் தாங்களுட்கொ
ண்டு மனையெங்குந் தெளிந்து ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்து அன்பு
டன் ஆராதித்துப்பணிந்து திருவமுது படைக்கும் வகையெவ்வா
றென்ன அமுதுடன் கறிகளை யொரோதரமாகக் கொண்டுவந்து படை
க்கவேண்டுமென்று வயிரவமூர்த்தி கட்டளையிட அவ்வாறே பரிகல
மிருத்தித் திருவமுதுபடைக்க நோக்கி நாம்சொன்னபடி யுறுப்பெ
லாஞ் சமைத்தீரா வென்றனர் தலைக்கறி திருவமுதுக் குதவாதென்
று நீக்கினோமென்ன அதுவும் நாமுண்பதேயென்று வயிரவர் சொ
ல்ல நாயனார் மனம் வருந்துகையில் தாதியாரடியேன் சமைத்து வை
த்தேனென்று கொண்டுவந்து கொடுக்க அதையும் படைத்தவுடன்
வயிரவமூர்த்தி தொண்டரை நோக்கி நாம் சிவனடியார்களுட னுண்ப
தன்றி தனியே யுண்பதில்லை யாதலால் அடியாரை யழைத்துக்கொ
ண்டு வரவேண்டுமென்ன யிதற்கென்ன செய்வோமென்று மனமய
ர்ந்து வெளியே சென்று யெங்குங்காணாமையால் மனம் வருந்திப் பயி
ரவரைநோக்கிச் சுவாமி அடியாரை யெங்குங்காணேன் அடியேனுல
கத்திலுள்ளாரைநோக்கி யானுமுள்ளேனென்று யென்றுபணி

ந்து நின்றவரைநோக்கி யமலைபோல விபூதியணிகின்றவர்களொ ருவருமில்லை யாதலால் நீரிருந் துண்ணலாமென்று வெண்காட்டு நங் கையைப்பார்த்து வேறொருபரிகலந் திருத்தி நமக்குப் படைத்திருப் பதி லெடுத்துப் படையுமென்ன அவ்வாறே யவர்படைத்தனர் நாயி ஞர் நாமுண்ணுதிருந்தால் வயிரவ நுண்ணுறொன்று முன்பு உண்ண த்தொடங்கலும் நாம் ஆறுமாதத்துக் கொருக்கா லுண்பது நாள்தோறு முண்பவர் நீர் நாமுண்ணும்வரையில் தாழாமல் முன்னுண்ணத் தொ டங்குகின்ற தென்னென்று தடுத்தருளி நீர் புத்திரனைப் பெற்றிருந் தால் உடனுண்ண வவனை யழையுமென்றனர் நாயனு ரவனிப்போ துதவாதென்னலும் வயிரவமூர்த்தி யவனை யுடன் வைத்துக்கொண் டே யமுதுண்பதென்ன இதற்கென்ன செய்வோமென்று துயரங் கொண்டு சென்று கட்டளையின்படி யழைக்கப் பரமசிவனுடைய தி ருவருளால் பள்ளிக் கூடத்திலிருந்து ஓடிவருகிறவன்போல் வந்த புத்திரனைத் தாயெடுத்துக் கொடுக்கத் தந்தையார் மிகுந்த சந்தோ ஷத்துடன் வாங்கிக்கொண்டு மனைக்குட் புகுத முன்னமே வயிரவ மூர்த்தி மறைந்துவிடக் காணுமையால் அளவிலலாத் துயரங்கொ ண்டு பரிகலத்தில்படைத்த கறியமுதிறைச்சியுங்காணுது அச்சங்கொ ண்டு வயிரவமூர்த்தி யெங்கு மறைந்தருளினுரென்று புறத்தில் வந்து தியங்கும்போது பார்வதியார் சுப்பிரமணியர் யென்னு மிவர்களுடன் ரிஷபவாகனத்தி லெழுந்தருளி அவர்கள் தம்மை யெப்போதுந் தரிசி த்துக்கொண்டிருக்கவுடன் கொண்டெழுந்தருளினர்.

சரித்திரச்சருக்கம்

முற்றியது.



சிவமயம்.

# அகராதி.



அகராதி

முற்றும்.

---







# சிறுத்தொண்டநாயனார்

## சரித்திரக்கீர்த்தனை.

விநாயகர் காப்பு.

வெண்பா.

சீரார்புவியிற் சிறுத்தொண்டனார்புகழைப்
பேராருங்கீர்த்தனமாய் பேசுதற்கிங் - கோராருந்
தந்திமுகத்தெந்தைச் சதங்கையணிபொற்பதத்தைச்
சிந்தையிற்சிந்தித் தேத்துவாம்.

பரசிவவணக்கம்.

இராகம்-கௌரீமனோகரம்-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

சம்போமகிஷாடனா - சர்வஜீவகாரணா
சம்போமகிஷாடனா

நம்பினோர்க்கருள்செயும் நாதனேவநீதனே
அம்பிகைவிநோதனே ஆலமுண்டநீலகண்ட. (சம்)

வெண்விடைமேல்வரும் வேதவேதாந்தனே
மண்புகழ்சித்தாந்தனே மன்றுளாடி கொன்றைசூடி. (சம்)

பனையொருபாகனே பசிமதிமோகனே
மறைசொலுமனோகனே மாசிலாத காசிநாத. (சம்)

## சிறுத்தொண்டநாயனார் சரித்திரக்கீர்த்தனை.

தருணமிதையனே தயாபராக்ருபாகரா
அருணாசலமேனத்திரிம ஆதியான சோதியோனே. (சம்)

உமையவள் வணக்கம்.

ஏரணிவேணியடியருக்கமுது திருமலித்திடுநியதியென்னுஞ்
சீரணிந்தேநற்கறியதைப்பெற்ற சிறுத்தொண்டர்புகழைநாயேனித்
தாரணிதன்னிலுரைக்கவேவருளுஞ் சங்கரற்கினியமாதேவி
பூரணிவிமலிபெரியநாயகியின் பொற்பதமிறைஞ்சிவாழ்த்துவமே.

சுப்பிரமணியர் வணக்கம்.

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஆதியாஞ்சிவத்தி னுதல்விழியதனில்
அறுபொறியாகவேயுதித்த
சோதியேதேவ ரிடுக்கணைநீக்கச்
சுந்தரிபாலமுதுண்ட
நீதியேமேலோ ருளத்தினிற்றோன்று
நிர்மலானந்தமெய்ப்பொருளே
போதியாயிதனைப் பேசவேவெனக்குப்
பூரணஞானதேசிகனே.

அடியார்வணக்கம்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மங்கையர்கோடம்பதியைச் சேர்ந்தோர்சீரை
மாநிலத்திலுரைத்திட வேவைப்பருக்குஞ்
சங்கரனைச்சந்துவிட்ட சுந்தரற்குஞ்
சம்மந்தருடன்வாதவூரருக்கும்
பொங்குகடல்சூழுலகைப் புரக்கவல்ல
புண்ணியநற்றொண்டருக்குஞ் சேக்கிழார்க்கும்
நற்கரத்தைக்கூப்பிமிக வாவலோடு
நாடுவேனடிகளைக்கொண்டாடுவேனே.

அவையடக்கம்.

வேலைசூழிஞ்ஞாலமதின் விளங்குஞ்சவையவருஞ்
சாலவுணர்ந்தபுலவோருந் தந்தைகளிக்குமரியசிறு
பாலர்மழலைமொழிகேட்டுப் பாகோடமுதங்கலந்துண்டாப்
போலவெனதுபுன்சொல்லும் புகுமென்றவையிற்றுணிந்தேனே.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறுத்தொண்டநாயனார்

## சரித்திரக்கீர்த்தனை.

விருத்தம்.

உருநாட்டுஞ்செயல்காம னொழியவிழிபொழிசெந்தீ
வருநாட்டத்திருநுதலார் மகிழ்ந்தருளும்பதியயலிற்
கருநாட்டக்கடைசியர்தங் களிகாட்டுங்காவேரித்
திருநாட்டுவளங்காட்டுஞ் செங்காட்டங்குடியாகும்.

கீர்த்தனம்-இராகம்-கமாஸ-தாளம்-ஆதி-

பல்லவி.

சீராருஞ் சிறுத்தொண்டர் சரித்திரம்
செப்பிடக்கேட்பவர்க் கரும்பவ வுபத்திரம்

சரணங்கள்.

நீரார்மேனி விமலனுக்கடியரை
தேடியுங்கூடிக் கொண்டாடிவமுதளித்த (சீரா)

செல்வமதாகச் சிவனாருளிய
சேயதைவயிரவற் காய்கறி சமைத்த (சீரா)

# சிறுத்தொண்டநாயனார் சரித்திரக்கீர்த்தனை.

தன்மனைத்தாதி தனயனாரோடுந்
தாண்டவனருளாற் சாயுச்சியமேவிய (சீரா)
கொண்டிச்சிந்து.

சீருலகோரெவரும் புகழ்
திருச்செங்காட்டங்குடித் தலமதனில்
மாமாத்திரர்களென்னு மரபில்
மறையவராகவே யவதரித்துப்
பரஞ்சோதியாரெனவே மிகு
பண்புடனேதிரு நாமமுற்று
குலத்துக்குரியபடி யவர்
கோதறவேயாயுள் வேதமுதல்
தநுர்வேதமோடனைத்தும் விறைவிற்
றக்கபடியே யுணர்ந்தவராய்ச்
சோழனரண்மனையில் மந்திரித்
தொழிலதுபெற்றுச் சிவானந்தமாய்
அரனடியார்களுக்கே நித
மமுதளிக்குமியதி யுள்ளவராய்
இருக்குமர்நாளையினிற் றன்
னிறைபொருட்டாய்வட தேசத்தின்மேற்
சேனையுடன்சென்று அவண்
செறியுமரசரோ டமர்புரிந்து
வெற்றியடைந்தவருக் குற்ற
வேணிதிகடன்கைவசமாய்ப்
பெற்றேதிரும்புகையில் முரசுப்
பேரொலிகேட்டு மகிழ்ந்தரசன்
பத்தியுடனெதிரிற் சென்று
பரிவோடவரை யழைத்துவந்தே
மற்றுமுள்ளமந்திரிகளா லிவர்
மாதவமுஞ்சிவ நேசமதும்
அறிந்தேமனமகிழ்ந்து மிகு
வன்புடன்வேண்டும் பொருளளித்துச்
சிவத்தின்பணியதனிற் றுங்கள்
சென்றிருமென்று விடைகொடுத்தார்

விருத்தம்.

மன்னவனைவிடைகொண்டு தம்பதியின்வந்தடைந்து
பின்னுபுகழ்பரஞ்சோதியார் தாமும்பணிமதிவாழ்
சென்னியனாக்கணபதீச்சரத்திறைஞ்சித் திருத்தொண்டு
முன்னைநிலமையில்வழுவா முறையன்பிற்செய்கின்றார்.

சிந்து.

அன்றுமுதலளவாய் பின்னு
மதிகவிருப்பமதுள்ளவராய்
வெண்காட்டுநங்கையெனு மனை
வேல்விழியாளுட னிலலமது
வழுவாமலேநடத்தி நிதம்
வடியாரைத்தேடி யமுதளித்து
தொண்டர்களாலிவருஞ் சிறுத்
தொண்டரெனவரிய பெயரும்பெற்று
பரமசிவத்தருளாற் றிங்கள்
பத்ததனிற்சீ ராளனென்னும்
புத்திரனைப்பயின்று வெகு
போதரவாக வளர்த்தவரும்
ஐந்தாம்வயததனிற் கல்வி
யன்புடனேவவற் கோதிவைக்கப்
பள்ளியதனில்வைத்துச் சிவ
பத்தியுடனவர்வாழ்ந்திருந்தார்.

விருத்தம்.

நறையிதழித்திருமுடியா ரடியாரைநாடோறு
முறைமையினிற்றிருவமுது முன்னூட்டிப்பின்னுண்ணு
நிறையுடையபெருவிருப்பா நியதியாகக்கொள்ளுங்
துறைவழுவாவகையொழுகுந் தூயதொழிற்றலைநின்றார்.

வசனம்.

இவ்விதமாய்த் தனதரசனிடத்தி லளவற்ற நிதியோடு விடைபெ
ற்றுத் திருச்செங்காட்டங்குடியிற் கணபதீச்சரத்தை யணைந்து அ
ணெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீகணபதீசனையும் மலர்க்குழல் நாயகிய
ையும் பணிந்து நாடோறும் பரமசிவத்தினது அடியார்களைத்தே
மிகப்ரீதியோ டமுதளித்துத் தான் பின்னுண்ணும் நியதியையுடை
சிறுத்தொண்ட ரோர்நாள் தன்மனைவியைப் பார்த்து ஓ., சரசி நாய

து கர்மானுபவ நீக்கும்பொருட்டு மன்னுயிரைத் தன்னுயிர்போ ஞக்கித் தானமந்திரவிரதமென்னும் கிரியைகளின் விருப்புற்று நடக் லன்றி பவம் நீங்காதுயென்பதற்கு உதாரணம்.

### கைவல்ய விருத்தம்.

ஆனபாவிகளடைவனரகங்க ளவசியமானாலுந்
தானமந்திரவிரதயோகங்களாற் றவிருமென்பதுபொய்போ
யீனமாம்பலஜன்மசஞ்சிதவினை யெத்தனையானாலும்
ஞானமாங்கனல்சுடுமெனுமறைமொழி நம்பினால்வீடுண்டே.

என. இதனைக்காட்டி யின்றுமுத லடியார்களுக்கு விசேஷமா முதளிக்கவேண்டுமாதலாற் றீவிரமாய்ச் சமைப்பா யென்றுமொ ந்தார்

### சவாபி.

தையலராகும் வெண்காடுநங்கையுந்
தயவுடன் மஞ்சன மாடியபின்
ஐயனைப்போற்றிப்-பணிந்தாப்பிரீதிகொண்
டகத்தைமெழுகி-யலங்கரித்தாள்
வையகமுய்யுமடியார்தமக்கு
வமுதிடவேகாலந் தாழ்க்குமென்றே
வெய்யவடிசி-லொடு பல்லுணவதும்
வேளாதுகொண்டே சமைத்தனளாம்.
மைவிழியாளு மகிழ்ந்தினிதாக
மதிநுதலின்வெண் பொடியணிந்து
கையதுகூப்பிக்-கடவுளேயென்று
கருதிக்கணவனுக் கோதலுற்றாள்.

### வசனம்.

தொண்டரது பத்தினியாகிய வெண்காட்டுநங்கைச் சட்சுவை டுங்கூடிய பதார்த்த வகைகளும் வடிசில் முதலிய யாவுஞ் சமை த்து முடிந்த பின்னர் ஸ்நானஞ்செய்து மதிநுதலிற் பொடியணிந்து வனைத் துதித்துத் தனது கணவனைப்பணிந்து கூறுவாள்.



கீர்த்தனம்-இ-ம்-ஜெஞ்சுருட்டி-அடதாளம்.

பல்லவி.

ஐயருக்கமுதளிக்க விட்போ து
வழைத்திடும் ஸ்வாமி யென்றனள்மாது

சரணங்கள்.

சைவபாதவருக்கனுகூலா
சரசியாமெனச்சுகந்திடுஞ்சீலா (ஐய)
சொன்றைசூடியருளியபூவே
கோதிலாத்தொண்டுசெய்யும்பத்தாவே (ஐய)
அஞ்சலென்றேவடியனைநாடி
வன்புடன்புறம்போகிநீர்தேடி (ஐய)

வசனம்.

இப்படியுரைத்த மொழியதைக்கேட்ட சிறுத்தொண்டர் மிக வாவ லோடு புறஞ்சென்று அடியார்களைக்கண்டு பணிந்தழைத்து வந்தார்

இ-ம்-டோடு-கண்ணிகள்.

கோதிலாதமனையாளுரையுற்றே கொற்றவர்புறம்போகி
நாதவேலோடுவடியார்களைக்கண்டே கனிவுடனழைத்துவந்தார்
தாகியோடுதென்மனையெதிரிறைஞ்சியே தண்புனல்கொண்டேந்தப்
போதினேருக்கிரப்பதமதையவர்க்குப் புனிதரும்விளக்கினராம்
பாதிமாமதியைச்சூடியபத்தரின் பதமிசைமலர்தூவி
ஆதியேயரனேயெனத்தூபமு மன்புடன்காட்டினபின்
நீதியோடுவண்ணமளித்திடப்புசித்தவர் நீடூழிவாழியென்று
ஓதியேசெலத்தொழுநாதன்றனில்லோடு வுண்டவர்வீற்றிருந்தார்.

பொது விருத்தம்.

அண்டர்கள் தேவுக்கடியருக்கன்னை
மளிப்பதேசுகமெனவாழும்
தொண்டர்கட்குச்சிறுத்தொண்டர்தம்பெருமையைச்
சொல்லுவோமென்றெவ்வண்ணம்

கொண்டுசெங்கதிரோன்விறைவினிற்றனது
குதிரையைத்தூண்டிமேற்றிசையைக்
கண்டவன்போலக்குதித்தனன்புவியிற்
கடுகியேயிருளதுசெறிய.

வசனம்.

கதிரவன் மேற்றிசையிற்சென்றபின் புவனமனைத்து மஞ்ஞா
ளனது யிதயம்போன்ற காடாந்தகாரமாகிய விருட் செறிந்தமை
லன்றிரவிற் சிறுத்தொண்டர் தன் மனைவி மக்களோடும் போஜன
செய்து தாம்பூலந்தரித்துப் பள்ளியறைசேர்ந்து சயனித்துச் சூரிய
தயிப்பதற்குமுன் றுயினீங்கி ஸ்நானஞ்செய்து பூசைமுடித்தவ
மூர்த்தருளி யிருக்குங் கணபதீசரைத் துதிக்கின்றார்.



கீர்த்தனம்-இராகம்-பியாகு-தாளம்-ஆதி.

பல்லவி.

அருள்செய்வாய் அடிமையைக்காத்
தருள்செய்வாய்.

அநுபல்லவி.

மருமலர்ச்சேர்குழலாள் மகிழுங்கணப தீசா (அரு)

சரணங்கள்.

எய்தும்வினையைப்போக்க வெனக்குநீசொந்தம்
யென்போலடியருனக் கெங்குமனந்தம் (அரு)

பரமேயென்மனமோகின் பணிசெய்யவுண்டு
பாழக்குட்க்ஷிபாதையாற் பரிந்தென்னைகொண்டு (அரு)

கவலையொழியச்சற்றே கடைக்கண்பாரானே
கனவிடைப்புழுவெனக் கலங்குகின்றேனே (அரு)

உற்றதுணைத்துமூன்ற னுளபொன்னகல்லா
வுன்பதமன்றிவேறொன் றுனைனேசொல்லா (அரு)

அறுமூன்றிருதோளனே யழுந்திய தாளா
வன்பனருணசலனுக் கருணையாளா (அரு)

வசனம்.

கடவுளைத்துதித்துத் தனதில்லுக்கு வருவதற்குள் மனையாளாகிய வெண்காட்டு நங்கைச் சமையல் முதலிய யாவுமுடித்துக் கணவரைத் தாதியாராகிய சந்தன நங்கையோடு மெதிர்பார்த்திருந்து வருதலைக்கண்டு மனமகிழ்ந் தெதிர்சென்று பணிந்து யெனதாருயிற்கோவே இதுபரியந்த மடியார்க ளொருவரையுங் காணாமையாற்றேடியழைத்துவாரு மென்று கூறியதைக் கேட்ட தொண்டர் தேடுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தர்பார்-தாளம்-ரூபகம்.

பல்லவி.

தேடினா ரெங்குந் தேடினார்

சரணங்கள்.

ஆடியபாதரடியரைக்காணாம ல்
வாடிமிகவும் வயங்குஞ்சிறுத்தொண்டர் தேடி
அன்பர்கள்வாழு மதத்திலுங்காணாம ல்
துன்பமடைந்து துகளிற்சிறுத்தொண்டர் தேடி
பாதிப்பிறையணி பத்தரைககாணாம ல்
ஓதியயாரும் றாரெங்குஞ்சிறுத்தொண்டர் தேடி
கொன்றையணிந்தோன்குழாமதைக்காணாம ல்
இல்லறைக்கென்செய்வோமென் றேங்கிச்சிறுத்தொண்டர்-தேடி

வசனம்.

இவ்விதமெங்குந்தேடியுங்காணாது கணபதீச்சரமணைந்தவ ணெழுந்தருளியிருக்குங் கடவுளைப் பணிந்து யென்செய்வே னெனக்கூறுவார்.

கீர்த்தனம்-இ-ம்-தேசிகதோடி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

என்னசெய்வேனீசா வெழிற்செங்காட்டுவா சா
உன்னுமன்பர் நேசா வுறச்செயுஞ்சர்வே சா-என்

இன்னஞ்செய்யிற்குது யினிவிடுவதேது
துன்னும்புவிமீது தொண்டனைக்காணுது-என்

கனவுகண்ட வூமன் கருத்ததுபோலாமென்
மனமகிழ்ந்துபூமன் மதித்தமரையமாமன்-என்

ஆலமுண்டபூவே யமரர்தேடுங்காவே
நீலகண்டதேவே நிர்மலாவென் கோவே-என்

கருணைசெய்யுந்தியாகா கவலையுறப்பாகா
அருணசலனேகா தகமகிழ்னவபோகா-என்

வசனம்,

தொண்டர் மறுப்படியுங் கடவுளைப்பார்த்துப் பாபியேனுகிய
ன்மீது யித்தனை வர்மமாமோ வுமக்கிது நீதியோவெனக் கேட்ட



கீர்த்தனம்-இ-ம்-அமீர்கல்யாணி-தாளம்-மிஸ்ரம்.

பல்லவி-

நீதிதானே சொலையா நெஞ்சமென்ன சிலையா

அநுபல்லவி,

ஆதியேயெனமேருதும் அடியனைக்காவாதும்-நீதி

சரணங்கள்.

மூத்தர்பணிநாதா முற்றுமென்மேல் வாதா
சித்தமதிரங்காதா செவியதுகேளாதா நீதி

வஞ்சமுனக்கேது வாயிருந்தும்பேசாது
தஞ்சமென்போர்மீது தடைசொலத்தகாது நீதி

அடிமையென்னதலையா வாளவென்றல்மலையா
படிமிசைநீயிலையா பார்க்கவுங்கண்ணிலையா நீதி

கருணமிகுபூவே தயைபுரியுங்காவே
அருணச்லன்கோவே ய்கமகிழுந்தேவே நீதி

வசனம்.

சிறுத்தொண்டரிவ்வித மோலமிட்டுச் சர்வஜீவ தயாபரா சம்போ சங்கரா நாயினுக்கடையேனுகிய வெனதுமுறை நின்து ப்ரமறியா தென்னே சகலபுவன கர்த்தாவாகிய நீயென்னைக் கண்பாராவிடி லிவ் வேழை யுய்யும்வா றெவ்விதமெம்பதற் குதாரணம்.

தாயுமானவ ரருளிச்செய்த

ஆசிரியவிருத்தம்.

பொய்யினேன்புலையினேன் கொலையினேனின்னருள்
புலப்படவறிந்திலேயாம்
புன்மையேன்கல்லாத தன்மையே னன்மைபோற்
பொருளலர்ப்பொருளைநாடும்
வெய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினேனென்றென்னைநீ
விட்டுவிடநினைவையேற்றட்டழிவதல்லாது
வேறுகதியேதுபகலாய்
துய்யனேமெய்யனேயுயிரினுக்குயிரான
துணைவனேயிணையொன்றிலாத்
துரியனேதுரியமுங்காணுவதீதனே
சுருதிமுடிமீதிருந்த
வையனேவப்பனேயெனுமறிஞரறிவைவிட்
டகலாதகருணைவடிவே
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே.

வசனம்.

எனக்காட்டி மிகவயர் * வுற்றகாலையில் பரமசிவம் கருணைகூர்ந்து யிவரது அன்பைப் புலப்படுத்தும் பொருட்டுக் கைலையைவிட்டெழுந்தருளினார்.

விருத்தம்.

இத்தன்மைகிழநாளிவர்
திருத்தொண்டிருங்கயிலை

யத்தர்திருவடியிணைக்கீழ்
சென்றணையவலருடைய
மெய்த்தன்மையன்புறுகர்க்
தருளுதற்குவிடையவர்தாஞ்
சித்தமகிழ்வயிரவராய்த்
திருமலைநின்றணைகின்றார்.



கீர்த்தனம்-இ-ம்-கௌளிபந்து-அடதாளசாப்பு.

பல்லவி.

வைரவமூர்த்திபோல் வடிவமாகி வருகிறார்

அநுபல்லவி.

கைலையங்கிரி - யுறையுமீசன்
காலகாலனெனுஞ்சர்வேசன் (வைர.)

சரணங்கள்.

அங்கமுழுதும் நீறுயிலகுவிநோதம்-புவி
யதிரக்கரத்துறுஞ்சூலமுஞ்சங்குநாதம்
எங்கும்பூரணமாய்நிறைந்தவேதம் - உய்யு
மெளியர்மிடியதையகற்றவந்தப்ரசாதம்

மங்கைமலர்குழலாள்சமேதன்
மகிழ்திருச்செங்காட்டங்குடிவாழ்நாதன் (வைர.)

ஆலகாலவிடத்தையருந்துஞ்செவ்வாயன்-சசி
யாதவற்குநல்லருள்புரிந்தசகாயன்
கோலமதகரியுரியணிந்திடுமேயன்-கொடுங்
கோதிலடியர்கள்பவமொழிக்குமுபாயன்

ஞாலமதிலெயின்மூன்று மெரித்தவன்
நாடிவந்தமழுமானைத் தரித்தவன் (வைர.)

சுத்தநிற்குணமாய் நிறைந்திடுசோதி சொலுஞ்
சுருதிமுடியதின்மீது நடமிடுஆதி
எத்தலத்தவரும் பணிந்திடுநீதி வெழி
யிவனகைமன்முடியழுந்த விறுத்துமறுதி

பத்தனருணாசலனுக் கருள்பதி
பரவுமமரர்கள் பணிகொள்பசுபதி (வைர.)

விருத்தம்.

தண்டாதவொருவேட்கைப் பசியுடையார்
தமைப்போலக்
கண்டாரைச்சிறுத்தொண்டர் மனைவினவிக்
கடிதணைந்து
தொண்டனார்க்கென்னாளுஞ்
சோறளிக்குந்திருத்தொண்டர்
வண்டாருந்தாரினார்
மனைக்குள்ளாரோவென்ன

வசனம.

சச்சிதானந்த சின்மயஸ்வரூபமாகிய பரமசிவம் கருணைகூர்ந்து கயிலையைவிட்டெழுந்தருளி வைரவ வேடத்துக்குரிய சின்னங்களோடுந்திருச்செங்காட்டங்குடி வீதியினின்று அவண தனக்கெதிர்ப்பட்டவர்களைப்பார்த்து மிகப் பசியுடையவர்போல் அப்பா இவ்வூரிற்றொண்டர்களுக் கன்னமளிக்குஞ் சிறுத்தொண்டர் மனை யெங்கனமென்று வினவி யறிந்துக்கொள்பவர்போ லதிவிரைவிற்சேர்ந்தத் தொண்டரின தகத்தின் றலைவாயலி னின்று அமுதளிப்பாருளரோ வெனக்கூறுவார்-

ஆனந்தக்களிப்பு.

அமுதளித்திடுவா ரிங்குளரோ நல்ல
ஆண்டியாகுமெனக்கு வேண்டியபடியே
அமு.

பத்தர்க்குமேலான பத்தன் கிட்டிப்
பரவுமடியார்க்கருள் பாலிக்கு முத்தன்
எத்திசையுந்திரியும் பித்தன் யெனக்
கின்புறவன்னமளிப்போன்ப்ர சித்தன்

அமு.

உத்தரதேசமென்னாடு கையி
லுற்றதோசூலந்தலைமண்டை யோடு
சித்திரைசொளிடஞ்சுடுகாடு இந்த
நேர்மையறிந்தவனே யடைவதுவீடு

அமு.

தொண்டரொருவருமிங்கிலையா மிகத்
தோணும்பசிக்குதவாச் சோறொன்னமலையா
கண்டவர்க்கென்பதி துலையா வெண்மேற்
காதல்கொண்டவர்க் கிந்தவூரொன்னமிலையா

அமு.

---

விருத்தம்.

வந்தணைந்துவினவுவார்
மாதவரோயாமென்று
சந்தனமாங்கைதயலார்
முன்வந்துதாள்வணங்கி
யந்தமிலசீரடியாரைத்தேடி
யவர்புறத்தணைந்தார்
யெந்தமையா ளுடையவரோயகத்து
ளெழுந்தருளுமென

வசனம்.

இப்படி வினவிய வைரவமூர்த்தியின் மொழியைக் கேட்டுச் சந்தனநங்கை யென்னுந் தாதி யோடிவந்து பணிந்து யெம்மை யாட்கொள்ளவந்த மணியே தொண்டனார் அடியார்களைத் தேடும்பொருட்டே புறஞ்சென்றார் தாங்கள் தயைசெய்து மனைக்கு ளெழுந்தருளுமென மொழிந்ததற்கு வைரவர் கூறுவ

வேண்டுமவைகளன்புடனளிப்போம்
விண்ணேயெழுந்தருளும்
தாண்டவனார்மகிழ்ந்தெமக்கருள்புரிந்த
தனியேயெழுந்தருளும்



விருத்தம்.

கண்ணுதலிற்காட்டாதார்
கணபதீச்சரத்தின்கண்
வண்ணமலராத்தியின்கீழிருக்கின்றே
மற்றவர்தா
நண்ணினனாயிருந்த
பரிசுரைப்பீரென்றருளி
யண்ணலார்திருவாத்தி
யணைந்தருளியமர்ந்திருந்தார்.

வசனம்.

மற்றிக்கண்ணனைப்பார்த்து வைரவமூர்த்தமாய் வந்தருளிய வடி ரம்மங்கையி னன்புக்கமகிழ்ந்து ஓமாதுநல்லாய் யாம்கணபதீச் ரத்திற்றிருவாத்தியின்க ணிருக்கின்றோம் உமதுபத்த ரிங்கடைந்த [illegible]துரைப்பாயாகவெனமொழிந்தெழுந்தருளித் திருவாத்தியின் ழமர்ந்திருந்தார்.

விருத்தம்.

நீரார்சடையானடியாரை
நேடியெங்குங்காணாது
சீரார்தவத்துச்சிறுத்தொண்டர்மீண்டுஞ்
செல்வமனையெய்தி
யாராவின்பமனைவியாற்கியம்பி
யழிவெய்திடவவரும்
பாராதரிக்குந்திருவேடத்தொருவர்வந்த
படியகர்ந்தார்.

வசனம்.

கங்கைவேணிய னடியார்களை யெங்குந் தேடிக்காணாது தளர்ந்து மனையில்வந்து பத்தினியோடு பகர்ந்து மிகுமெலிவடைந்த தன்பத்தா வைப்பணிந்து வேத வேதாந்தனுக்கினிய வெந்நாதா இங்ஙனம் நமது நோன்பிற்கேறும் பொருட் டாதாரமாயிப்பூதல மனைத்தும் புரக்கவு ல்ல வோர் புண்ணியர்வந்து திருவாத்தியின்கீ ழிருக்கின்றோமெனச் சென்றாரெனப் புகன்றதைக்கேட்டு மிகவாவலோடு விரைவிற்சென்று பரசிவத்தடியாரைக்கண்டு அஷ்டாங்க சாஷ்டாங்கமாய்ப் பணிந்து மாத வமே அருள்செய்ய வேண்டுமென்று கூறுவார்.

விறு.

கீர்த்தனம்-இ-ம்-உசேனி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

மாதவமேயருள்செய்யுமமுதுக் கே - மனமகிழ்ந்து
வருவீர்வருவீர் காலந்தாழ்க்காமுன்னர்
வாசா நேசா ஜகதீச னருளியவெந்தன்

மாதவமே.

விடை.

கீர்த்தனம்-இ-ம்-நுசரி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

ஏதோவெனைக்கிட்டி யின்பமுடன்சொன்ன
யேலா தேலா துன்னாலப் பா - வெனக்கிட்
வேலாதேலா துன்னாலப் பா

விறு.

கீர்த்தனம்-இ-ம்-உசேனி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

காதையேதங்கள்விடைப்படியளிப்பே ன் - றமியனேற்குத்
தருவீர்தருவீர்தடைசொல்லாதிப்போதே
தாதா வதிதா நாதாவருளியவெந்த ன்

மாதவமே.

விடை.

கீர்த்தனம்-இ-ம் தனசரி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

உக்ரபூமியி லுற்றபடிசொல்வேன்
சித்தமுண்டோசொலாயப் பா - செப்பியபடி
சித்தமுண்டோசொலாயப் பா

வினா.

கீர்த்தனம்-இ-ம்-உசேனி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

வகையுதையெனக்குரையுமெங்கை யே-வழக்கப்போல
வாய்க்கும்வாய்க்கும் அடியேனிடமெவ்வளவும்
வாதா நீதா வேதாவருளியவெந்த ன்
மாதவமே.

விடை.

கீர்த்தனம்-இ-ம்-தனசரி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

மாதமுமிருநில் மன்னும்பசுக்கறி
போதவுண்ணுங்காளிது வே - புசித்தனை
போதவுண்ணுங்காளிது வே

---

விருத்தம்.

சாலநன்று முன்னிளையுமுடையேன்
றாழ்விக்கெனக்கில்லை
ஆலமுண்டாரன்பருக்
கமுதாம்பசுத்தானின்னதெனை
பேலவருளிச்செயப்பெற்றால்
யான்போயமுதுகடிதமைத்துக்
காலந்தப்பாமேவருவேனென்றுமொழிந்து
கைதொழுதார்.

வசனம்.

இப்படியுரைத்த வைரவரைப்பார்த்து மிகநன்று தங்களுக்கினிய விளையாவு முடையேன் ஆலகாலத்தை யுண்ட வையனுக்கடிமையாகிய வுமக் கென்னயசவேண்டியதோ வதை யருளிச்செய்தா லவ்விதமமைத்துக் காலந்தாழ்க்காது வருவேனெனத் தொழுதுநின்றார்.

விருத்தம்.

யாதுமரியதில்லையினி
 யீண்டவருளிச்செய்யுமென
நாதன்றானுமொருகுடிக்கு
 நல்லசிறுவனொருமகனை
தாதையரியத்தாய்பிடிக்கும்பொழுதிற்
 றம்மின்மனமுவந்தே
யேதமின்றியமைத்தகறியாமிட்டுண்ப
 தெனமொழிந்தார்.

வசனம்.

யாதுங்குறைவில்லை அருளிச்செய்யுமென்று சொல்லியமொழியைக்கேட்டு அப்பா தொண்டனே நம்மூரின் வழக்கம்போற் சொல்லுகின்றேன் ஒருகுடிக்கொருவனாகவும் ஐந்துவயதுள்ளவனாகவும் அவயவப் பழுதில்லாத வப்பிள்ளையை மனக்களிப்போடு தாய்பிடிக்கவுந் தந்தையானவன் கழுத்தை யரிந்து இஞ்சித்தேனுங் கிலேசப்படாதறிப்பாராகில் யாம்புஜிப்புக்கொள்வோமெனப்புகன்றார்.

---

இராகம் - கடுக்கா.

கண்ணிகள்.

அந்தமே துமில்லா னருளவந்தவெங்க
 ளாதியே பரஞ் சோதியே
அடியனேற்கிதென்ன வருமையோவென்று
 வாடினார் பண் பாடினார்.
எந்தையேயெனக்குச் சொந்தமானதுண்டேன்
 றேத்தியே மிகப் போற்றியே
எளியனேற்குவிடை யருளு மென்னவவ
 ரேவினார் வேர் மேவினார்.

வசனம்.

தொண்டர் வைரவனைப்பார்த்து யெம்மையாட்கொள்ளவந்தசோதியே யாதுக்குறைவில்லை தாங்கள் விரும்பியவண்ணமிப்போதையாலேலும் யெனக்குச் சொந்தமாகவேயிருக்கின்றது தீவரமா யான்போயமைத்து வருகின்றேன் விடை கொடுமென்று வினவிப் பெற்றவராய்க் கடவுளைத்துதிக்கின்றார்.

---

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-தாளம்-ஆதி,

பல்லவி.

சம்போசிவசங்கரா - சந்திரசேகராஹரா

சரணங்கள்.

அம்புவிபோர்துதி யப்பலத்தாடுதி
நம்பினேனீபேகதி நற்செங்காட்டுபாகிதி
சம்போ.

மங்களவாசா மலைமகள்நேசா
துங்கவெண்விடைவிஸ்வாசா தூயோய்கணபதிசா
சம்போ.

சர்ப்பாபரணா சதுர்வேதபூரணா
இப்பார்வினைசேரொணா தேழையேற்கருள்காரணா
சம்போ.

தருணமிதையா தவமுயர்மெய்யா
கருணைசெய்வாய்நாயேற்கு காலந்தாழ்க்காதவற்கு
சம்போ.

வசனம்.

தொண்டர் கடவுளை நோக்கி மஹாதேவ சம்போசங்கரா சர்வஜீவ தயாபரா பாபியேனுடைய மங்களத திருவருட் கயலாயினு மித்தருணத்தில் வந்த வடியரினது நோன்பிடேறும்படிக் கருணைசெய்யாதிருப்பது நீதியல்லவே யென்பதற் குதாரணம்.

தாயுமானவர்.

அரும்பொனே மணியேயென்னன்பே யென்னன்பான
வறிவேயென்னறிவிலூறு
மானந்தவெள்ளமே யென்றென்று பாடினே
னாடினேனாடிநாடி
விரும்பியேகூவினேனுலறினேனலறினேன்
மெய்சிலிர்த்திருகைகூப்பி
விண்மாரியெனவெனிருகண்மாரிபெய்யவே
வேசற்றயர்ந்தேனியா
னிரும்புநேர்நெஞ்சகக்கள்வனானாலுருகிலை
யிடைவிட்டுநின்றதுண்டோ
வென்றுநீயன்றுநானுன்னடிமையல்லவோ
யாதேனுமறியாவெறுந்
துரும்பனேனென்னினுங்கைவிடுதனீதியோ
தொண்டரொடுகூட்டுகண்டாய்
சுத்தநிற்குணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுகவாரியே.

வசனம்.

எனக்காட்டி மறுபடியும் நமதுமங்கையின் மனதெவ்வித மா
மோ வென்சொல்வளோ வென்று கூறுவார்.

லாவணி.

கண்ணிகள்.

மின் - என்சொல்வளோவறியேன்.

வேதமுடியிலுறை நாதா - வரம்
வேணகளிக்கும்ப்ரக் யாதா - நின்
பாதநிழலதுகிட் டாதா - அந்தப்
பாவமனதெவ்போ லாகாதா

மின்.

மங்கைமனதுவச மாமோ - பெற்ற
மாயையினுன்மன நோமோ - வெண்ணம்
பங்கமதாகவே [illegible] - வந்த
வைரவர்நோன்பதி டமோ

மின்.

பெண்ணைவள்பிரட்டறி யேனே - யென்ன
பிசகுமோகுறி யேனே - யெவ்
வண்ணமுனைப்பன்சிறி யேனே - வந்து
வாய்த்தவள்நிலைதெரி யேனே

மீன்.

தொல்லுலகோர்புக ழையா - வேந்தன்
றேசைமனமகிழச் செய்யா - விதைச்
சொல்லுவளோபிறர் கையா - புத்திர
சேபதசலுண ருய்யா

மீன்.

வசனம்.

வேதமுடிவாகு மெய்ப்பொருளே இப்பேதையின் கரத்தின் மிசையச்செய்வது நின்னருளே யன்றோவென்னில் ஸ்ரீகளது ணதை யளவிடப்படாதே யிக்காரியத்தை யானவளுக்கறிவித்தால் ங்கீகரித்திசைந்தாலன்றி புலப்படுத்தினுல் கெடுதி சம்பவிக்கும் ரான்பு மீடேறுமற் போய்விடும் மணவரையினின்று வங்கினி சா யாய் மாங்கல்யஞ் சூட்டிய மங்கையாச்சுதே என்று மனத்துணிவு ண்டு மொழிந்தால் பிறரறியச் சொல்வளோவென வச்சஞ்சொன் கின்ற தென்பதற் குதாரணம்.

நீதிவெண்பா.

பெண்ணொருத்திபேசிற் பெரும்பூமிதானதிரும்
பெண்ணிருவர்பேசில் விழும்வான்மீன்கள் பெண்மூவர்
பேசிலலைசுவரும் பேதையேபெண்பலர்தான்
பேசிலுலகென்றுமோபின்.

வசனம்.

என்னுங் கருத்தைக்காட்டிப் புலைச்சுரப்பழுக்குந் தாயக மிய வென்னையனே வம்மங்கையை யெவ்விதமு முய்யும்படிக் க ண செய்வாயென்று தன்மனைக்குவந்தபோது பத்தாவின்வரவை திர்பார்த்திருக்க வெண்காட்டுநங்கையானவர் தனது நாதன் அடிய யழைத்துவராமற் றனியாகவந்ததைக்கண்டு வினவுவார்

இ-ம்-அபரூபம்-அடதாளம்.

கண்ணிகள்.

நாதாயிதுவென்ன கோலம் வந்த
நம்பனடியார்தமைக் கொணருதஜால ம் (நாத
போதார்புனல்வயல்சூழ் கணபதீச்சரத்தி ற்
பொருந்துமாத்திநீழலில் இருந்தபவனைக்கா ணு (நாத
விந்தைவேடங்கொண்டே விளங்குமடியவர்த ம்
மெல்லடியைப் பணிந்தே விறைவிற்கொண்டு வராத (நாத
மூவிலைச்சூலமுடன் மழுக்குஞ்சரமுமேந் தி
முற்றத்தில்வந்தவரை முயன்றழையாதுவந் த (நாத

வசனம்.

நாதா மிகவும் பசிப்பிணியோடும் விந்தைவேடம்பூண்டு நம
முற்றத்திற்கு வந்தவரை யழைத்துவாமற் றனியாய்வந்ததென்ன
ள்ளலேயென்று யிரக்கப்படும் மனைவியைநோக்கிக் கூறுவார்

விருத்தம்.

வள்ளலாருமனையாளைநோக்கிவந்த
மாதவர்தாம்
உள்ளமகிழவமுதுசெய
விசைந்தார்குடிக்கோர்சிறுவனைக்
கொள்ளும்பிராயமைந்துளனை
யுறுப்பிற்குறைபாடின்றித்தாய்
பிள்ளைபிடிக்கவுவந்து
பிதாவரிந்துசமைக்கப்பெறிலென்றார்.

வசனம்.

சிறுத்தொண்டர் தனது மங்கையாகிய வெண்காட்டு நங்
கையைப்பார்த்து ஓமாதேகேளாய் ஆண்டவனருளால் நமக்குக்கிடைத்
வடியார் ஒரு குடிக்கொருவனாவும் ஐந்து வயதுள்ளவனாகவும் அ
யவப்பழுதின்றியிருக்கும் அப்பிள்ளையைத் தாய்பிடிக்கவுந் தந்தைய
ந்து மனக்களிப்போடுவதனைச் சமைத்துப்படைத்தால் உண்ணுவே
னெனச்சொன்னார் யென்செய்வோம் யெங்ஙனம் பெறுவோம் யா
ரேனும் பொன்னுக்கிச்சித்துப் பிள்ளையைக்கொடுத்தபோதினு மக்
களை கொலைசெய்யச் சம்மதியார்களேயென்றபருத்திருக்குந் தொண்
டரைப்பணிந்து கூறுவார்.



லாவணி.

கண்ணிகள்.

வாரும்வாரும்ப்ராணநாதா — நமது
வசத்திலிருப்பதுபோதாதா

கையில்வெண்ணெயிருக்கயாதா — மொருவர்
கடையில்நெய்கேட்பரோதெரியாதா

சோதிக்கவந்தீரோவென்சாமி — உமக்குச்
சொந்தமென்றறியாதோபூமி

எளியவர்நோன்புக்குச்சாட்சி — விதைப்போ
லெவர்க்குக்கிடைக்குமிந்தகாட்சி

பசித்திருப்பீரோசிவயோகி — விரைவிற்
பள்ளிக்குப்போய்வாருமென்றியாகி

அம்மான்வந்தானெனச்சொல்லி — பாலனை
யழைத்துவருவீர்கன்னல்வில்லி

விருத்தம்.

காதன்மனையார்தாங்கூறக்
கணவனாருங்காதலனை
யேதமகலப்பெற்றபே
ரெல்லாமெய்தினாற்போல
நாதர்தமக்கங்கமுதாக்க
நறுமென்குதலைமொழிப்புதல்வன்
வேதமணைந்தபள்ளியினி
னுடன்கொண்டெய்தக்கடிதகன்றார்.

வசனம்.

தொண்டனார்மனைவியின்றுமொழியைக் கேட்டுமிகவாவலோ டிருவன் வேதமணைந்திருக்கும்பள்ளியைநோக்கி வருகின்றார்.

விருத்தம்.

பள்ளியினின்றசிறுபாலன்
பரமன்செயலால்நித்திரையுற்
றுள்ளம்பதைததுத்துயினீங்கி
யுன்னிக்கண்டகனவதனைத்
தெள்ளுமறையோர்முன்சென்று
திகைத்துத்தேம்பியழுதழுது
வள்ளலேயென்றடிபணிந்தவ்
வகையையெல்லவுரைக்கலுற்றான்.

கீர்த்தனம்-இ-ம்-அபரூபம்-அடதாளம்-

பல்லவி.

கனவிலேதோதுயரம்போலக்காணுதே - யான்கண்ட
கனவிலேதோதுயரம்போலக்காணுதே

அநுபல்லவி.

அனவரதமுநினதடைக்கலம்
அடிமையைக்காத்தருள்செய்யு மையரே

கனவி.

சரணங்கள்.

அன்புடனேதந்தையழைக்கவும் - வந்து
வாவலால்மனையிலிருமழைக்கவும்
இன்பமதாயென்னை யின்றெடுத்தவன்னை
யிதவுடன்மஞ்சனமாட்டவுங் கண்ட

கனவி.

ஆட்டியபின்னமுதூட்டவும் - யெனக்
காபணிகளைப் பூட்டவும்
நாட்டமுடனெனைத்தெடுத்துமடியில்
நங்கைகிடத்திட நான்றுயிலக்கண்ட

கலிவி.

தூங்குமெனையன்னையெடுக்கவும் - தந்தை
தொந்தமுடன்றலைபிடிக்கவும்
பாங்குடனேவாள்கொடுத்தென்கழுத்தைப்
பதறுமறப்பற்றியறுத்திடவுங்கண்ட

கனவி.

விருத்தம்.

இப்படியுரைத்த மொழியதனைய
ரிளவலின்பாகிமுகநோக்கி
அப்பனேபித்தவேளையாதலின்று
லவமறியாச்சுவேறல்ல
ஒப்பிலாமணிநீ கண்டதோர்கனவை
யுண்மையென் றுன்னலதென்றே
தப்பிதமென்றேவறைந்திடுக்காலிற்
றந்தையாந்தொண்டர்வந்தனரே.

வசனம்.

இவ்விதமச்சிறுவனாகிய சீராளன்கண்ட கனவாற்றிகைத் தெழுந்து உபாத்தியாயரிடஞ்சென்று நான்கண்ட சொற்பனத்தைச் சொல்லியயருற்றகாலையிலையாதற்கு அப்பா சீராளா பித்தவேளையாதலால் யேதோ காற்றுவிஷயமாய்த் தோன்றுகின்றது பயப்படாதேயென்று சொல்லிக்கொண் டிருக்குஞ் சமயத்தில் தந்தையாகிய சிறுத்தொண்டர் மிகத்தீவரமாய்த்தேயமலைத்தும் வியர்வெழும்பப் பள்ளியையணைந்துச் சிறுவன் முகநோக்கி வாராய் செல்வமேயென வழைக்கின்றார்.

---

கீர்த்தனம்-இராகம்-தனாசரி-தாளம்-ஆதி.

பல்லவி.

வாராயெனது செல்வமே - வளவுக்கே
வாராயெனது செல்வமே

அநுபல்லவி.

சீராருணதுவம்மான் தேசத்திருந்துவந்தே
பாராமலுன்னையோர்கால் பசிதீரோவென்றுரைத்தான்

வாரா.

சரணங்கள்.

பகலில்நித்திரையேனோ பள்ளியினில்நீ
படிப்பதுவிது தானோ
வாமகிழ்ந்தேயுனது வையாருகிற் பல்லி
யடிவணங்கியென்றுனை யழைக்கிறானச் சொல்லி

வாரா.

வெய்யில்மிகவுமாகுதே - விசனமேனோ
வீண்பொழுதாகப்போகுதே
தையலல்லாளுன்றாய் தன்சமயனுமெதிர் பார்த்து
தாகமுந்தணியாமல் தவித்திருப்பரோ வோத்து

வாரா.

வன்னப்பலாக்கனியும் - நீயருந்திட
வளம்பெறு மாங்கனியும்
பொன்னினெழுத்தாணியும் பொற்பணிகளுங்கொண்டு
போதறவாயுடுக்கப்புதுமைப்பட்டாடையுண்டு

வாரா.

வசனம்.

இவ்விதமா யிதவுவார்த்தையோடு வந்தழைக்குந் தந்தையின் மொழியைக் கேட்டு வொருவிதந் தேறுதலை கொண்டவனுந் தனது உபாத்தியாயரைப்பணிந்து யெனியேனையாட்கொள்ளு மெந்தையே எனது தந்தையும் யான்கண்ட சொற்பனம்போலவே வந்துவிட்டாரா தலா லாண்டவன் செயலெப்படியோ வடியேனதேவரீ ரருள்செய்து விடைதரவேண்டுமென்று கூறுகின்றார்.

கீர்த்தனம்-இ-ம்-இ-துக்கடா-தாளம்-ஆதி.

பல்லவி.

அருள்செய்குவீரையரோ - யெனக்கேக
அருள்செய்குவீ ரையரே

சரணங்கள்.

அருள்செய்குவீரோ யருமறையோரே
தெருளுடையோர்தமக்காய் திகழுமெனக்

அருள்.

இங்கிதபாதன் வெழின்விடைநாதன்
கங்கையணிந்தவன்பசிக்கே காலந்தாழ்க்காது

அருள்.

அடியரைத்தாக்கி யகவிருள்நீக்கி
படிதனையேயளிக்கும் பரனுக்கென்னை

அருள்.

வசனம்.

இப்படி யுரைத்த மொழியதைக் கேட்ட வையர் மிக வுளங்க ளிந்து அடா அப்பனே வொப்பிலாமணியே வுனக்கு நானெத்தனை சொல்லியு முன் சிந்தை கலக்கந்தெளியவில்லையே வெனக்கூறுவார்.

கீர்த்தனம்-இ-ம்-பியாகு-தாளம்-ரூபகம்.

பல்லவி.

சிந்தைகலக்கந்தெளிய வுனக்குநான்
செப்பினதென்னவமோ வுனக்குநான்-செ

சரணங்கள்.

தந்தையைக்கண்டு மனந்தெளியாமற்
றயங்குவனோவொருபிள்ளை
மயங்குவதேனின்னஞ்சள்ளை
யிதென்ன கொள்ளை

சிந்தை.

கண்டகன்னைவரிஜமெனவெண்ணிக்
கலையுற்றுவென்ன சாரம்
சவலைநெஞ்சமாமோதிரம்
ஐயையோ கோரம்

நந்திதை.

கற்பகமேயின்கலக்கமகற்றிக்
கடுகிப்போய்வாராய்கண்ணுளா
குடிமுழுதாளுங்குணாளா
கோதில்சீராளா

சிந்தை.

---

வசனம்.

உபாத்தியாய ருரைத்ததைக்கேட்ட சீராளன் சிந்தைதெளிந்து வந்தனை புரிந்து விடைபெற்றுத் தந்தையை யடைந்தான் அவ்வாற டைந்த சிறுவனை வாரித்தழுவி முத்தமிட்டு வுச்சியை முகந்து அடா வென தருமைத்துரையே சிந்தனையே யுனக்கென்று நோன்மிதெடு த்துக்கொண்டு வழிபார்த்து யின்னும் வரக்காணேனே அந்தோ-வந்த சிவயோகி பசியா யிருப்பரோ வென் றெண்ணிக்கொண்டு தெருவாய யில் நிற்குந் தனது பத்தினியிடம் பிள்ளையைக்கொண்டுவந்து கொடு க்க மிகவாவலோ டெதிர்சென்று வாங்கி மார்போடணைத்து முகத் தோடு முகஞ்சேர்த்துச் சோபமடக்கும்படி பணைத்தேற்றியும ம றுபடியுங் குழவியினது பாதாதிகேச பரியந்தம் மொருதரம் உய்த் து நோக்கிப்பார்த்து உடனே வெறுத்து காலந்தாழ்க்கின்றதேயென த் தீவரமாய் மஞ்சனமாட்டத்துணிந்தார்.

---

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஆதி.

பல்லவி.

மஞ்சனமாட்டினளே - மங்கையவள்
மஞ்சனமாட்டினளே

அநுபல்லவி.

பஞ்சபாணனைவென்ற பரசிவத்தடியார்க்கு
தஞ்சந்தஞ்சமென்றே தனையன்சீராளனுக்கு

மஞ்சன

சரணங்கள்.

பந்தமனைத்துமுந்தம் போக்கி பணிமதிசேர்
பசுபதிக்காகுமெனத்தாக்கி பணிமுதலாங்
கொந்தலர்மாலையதை நீக்கி குஞ்சியதனைக்
கோதிநுதற்றிலகந் தாக்கி காதன்மிகுந்து
சுந்தரரஞ்சித ரஞ்சிதபாதன்
தொண்டர்தமக்கருள் தோயுமதிகன்
தந்ததவப்பொருளென்றவர்பேரால்
தண்புனலோடு வரும்பனிநீரால்

மஞ்சன.

---

வசனம்.

வெண்காட்டு நங்கையார் தனது புதல்வனாகிய சீராளனுக்கு மஞ்சனமாட்டிப் பட்டு பீதாம்பரங்களினாற் றேயத்தி லுற்ற நீரையோட்டிச் சட்சுவையோடுங் கூடிய வமுதூட்டிச் சிறுவனை மடியில்வைத்துத் தாலாட்டத்தொடங்கினார்.

---

தாலாட்டு-இ-ம்-நீலாம்புரி

கண்ணிகள்.

ஆராரோவாரரிரோ - வாரரிரோவாராரோ

நீரார்ந்தமேனி- நிமலனருளாலுதித்த
சீராளாவின்னுலவுஞ்- செஞ்சுடரோ கண்வளரீ

பூமாதவரெவரும் - போற்றிஜயபோற்றியென
மாமாத்திரர்குலத்து - மாதவமேகண்வ ளரீ

மாமனுக்குமுன்பிறந்த - மன்னனுடன்போர்புரிந்துங்
காமனெரித்தோனருளுங் - கற்பகமேகண்வ ளரீ

அடியார்தமக்குமிக - வன்புடனேவமுதுக்காம்
படியாயென்மடியுறையும்- பங்கயமே கண்வளரீ

லாவணி.

கண்ணிகள்.

மாதுநல்லாள்தன் மடிமிசைத்துயிலும்
மைந்தனையெடுத்தேயுலகறியா
மனோவினிநின்றனரோ மற்றவர்கிட்டி
வினைவினிற்சென்றனரோ

பழுவிலென்புதல்வன் கிண்கிணிப்பதத்தை
மடியினிலொடுக்கிக்கரமதனை
பங்கையர்பிடித்தனரோ வாயைமெல்ல
வந்தவாரடைத்தனரோ

விருத்தம்.

பதுமமென்கரத்தாலன்னைப் பாலன்வாய்மூடும்போது
பதிமிகுவனப்புற்றோங்கு மைந்தனுமகிழ்வாய்வந்த
வதிதியின்செயலையுன்னி யடாபவமொழியவேண்டி,
விதிமுதலெவருங்காணு விமலனைப்போற்றுவானே.

வசனம்.

இவ்விதந் தனது அன்னை தந்தையர்களது செய்கையை கவத்
சிறாளன் மேல்வருங்காரியத்தை நினைந்து பவத்தை யகற்று றுவார்
கடவுளைப்போற்றுவான்.

இ-ம்-அமீர்கலியாணி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கருணாகரனே - யருட்செயத்
தருணமரனே.

அநுபல்லவி.

அருணம்பரமான பராபர
சோதியனாதிசிற் ஜோதியரோஹரா (கருணா)

சரணங்கள்.

கதிநீயன்றி வேறில்லை யையனே
கணியாவிடிலோ சொலு மெய்யனே
விதிமாலறியா தொளிர் துய்யனே
வேதா-குணநீதா - வுயர்பாதா விலைதாதாதா (கருணா)

பவதோயந்தனக் காளாய்மிகப் பட்டேன்
பரமேசிறியே னின்பகந் தொட்டேன்
நவவாயலெனுமிச் சடம் விட்டேன்
காதா-நவில்போதா-புவிமீதா-நுயர்போதாநா (கருணா)

இருமூன்றாலுறும் வினையிற் றேயு
மிகலார் நின்னொண்டையுமே தேயு
மொருமூன்றி லொன்றாகியவென் றாயு
வுதவாவிடி-விதமேதுபுற்-புதவாழ்விது-சதமாமோசொற் ()

போற்றி-விருத்தம்.

உலகெலாமேற்றவல்ல வொருதனிமுதலே போற்றி
நிலவுலாவியசீர்வேணி நிமலனேபோற்றிபோற்றி
அலகிலாப்பிறவிநோயி லாழ்ந்திடாதாளவாய்போற்றி
மலைமகளோர்கூறுகும்வானவா போற்றிபோற்றி.

வசனம்.

பூரண சுத்தசைதன்ய வஸ்துவாகிய சிவசயம்புவைப் போற்
றினன்னம் பரமன் உவகைவாகனைக்கரிய அகாரியத்தில்

ரேய்ந்தழலும் அந்தக்கரணத்தைப் போக்கிப் பன்னிரெண்டுகாற் கொண்டு வீசும் வாசியைக் கும்பித்துக் குண்டலியி னருளாற் சுத்த சத்துவத்தைத்தாக்கி மதிமண்டிலத்தைக கலந்து அசைவற்று மரக தப்பாவைபோல நின்ற மைந்தனைத் தொண்டர்கண்டு மகிழ்ந்தவரா ய்க் கருவியைக்கொண்டு வகுந்துசெய்யத்தொடங்கினார்.

---

லாவணி.

கண்ணிகள்.

சித்தநுக்கொண்டு மையனாதுகொன்று
பரிவுடனிலகுந்தொண்டநனை
பற்றியேயவிழுத்திவைத்தே பாலன் கழுத்தை
யெற்றியேவறுத்தனரே

அருந்தவத்தலைமையருந்தகைநாதன்
றன்மைடயினின்றதிகைமி
லனிதகவர்புகழ்ந்தனரோ வதனையவ
ளொளித்திடமகிழ்ந்தனரே

உடலதைப்பிடித்தேவாலிற்றுவைத்து
வுறுப்புவெவ்வேறாய்த்தெரிந்தவரும்
பலகையோடரிந்தனரே உற்றபாண்டத்தி
லெல்லைவிளைப்புரிந்தனரே.

அவைகளுந்தந்த காயமொடணைத்து
மன்புடனேகூட்டியமுப்பிவிட்டே
யரிவையர்சமைத்தனரே வடிசிலதும்
பிரியமோடமைத்தனரே,

வசனம்.

வெண்காட்டுநங்கையார் சமையல்முதலியயாவுஞ் செய்துவைத் தபின் ஸ்நாநஞ்செய்து நெற்றியினீறணிந்து கடவுளைப்போற்றுவார்

இ - ம் - ராமா.

கண்ணிகள்.

பர்வதராஜ குமாரி மகிழும்
பரம்பரனுந்தேவே-மனப்பூவே-பத்தர்கோவே
பண்ணவா - தமியோங்களுக்கருள்
விண்ணவா - விண்ணவா.
அந்திவண்ண சின்னருட் கொடுவந்த
வதிதிமனம்போலே-புவிமேலே - யருளாலே
அற்புதா - எளியோர்முடிக்கனம
பொற்பதா - பொற்பதா.
மன்னும்விரதமீடேற்றியதற்குக்கைம்
மாறென்செயவோம்நேடி-கொன்றைசூடி-மன்றுளாடி
வாசனே - பவநோயறச்செய்
மீசனே - மீசனே.
அந்தமிலானைமென் மைந்தனவனை
யரும்பதத்திற்சேர்ப்பாய்-வினைதீர்ப்பாய்- யருள்பார்ப்பாய்
ஆதியே - அயன்மால்தனக்கெட்டாச்
சோதியே - சோதியே.

வசனம்.

இவ்விதமாய் சந்திரஜடாதர மூர்த்தியாகிய உமாமகேசனைத் திசெயதுவனாகிய வெண்காட்டுநங்கையார் தனது பத்தாவைத் பணிந்து கூறுவார்.

கீர்த்தனம்-இ-ம-ஆகிரி-அடதாளம்,

பல்லவி.

அழைத்திடுவீரென்கோவே - ஐயரிடஞ்சென்
றழைத்திடுவீரென்கோவே

சரணங்கள்

அழைத்திடுவீரென்கோவே யாதியருளால்வந்த
வடியனாயேவிறைவி லன்பாயமுதருந்த
அழைத்.

சந்தமலர்மாலைகள் முத்தின்
றாமநாத்திற்றவிசடுத்த
கந்தமலராசனங்காட்டிக்
கமழ்நீர்க்ரகமெடுத்தேந்த

இதுவுமது.

ஆயநீராற்சிறுத்தொண்டர்
சோழியார்தங்கழல்விளக்கி
யாயபுனிதப்புனறங்கடலைமே
லாரத்தெளித்திப்ப
மேயவில்லமெம்மருக்கும்
விரிவிரைமென்மலர்ச்சாந்தம்
யேயுந்தூபதீபங்கண் முறற்
பூசனைசெய்திறைஞ்சுவார்.

வசனம்.

வைரவமூர்த்தியாகிய வடியருக்கு வெண்காட்டு நங்கையார் மிக வன்போ டமுதளிக்கின்றார்,

சவாயி.

வையகமுய்ய மடியாரமக்கு
வமுதிடவேமிகு வாவலுடன்
பையெனவோடிப்-பரிகலந்தன்னைப்
பாவாடையிலேற்றியப் பாவையரும்.
வெய்யவடிசிலொடும்பல்லுணவும்
விசைந்தகறியுடன் முக்கனியும்
தையலளிக்க-விமலருங்கண்டு
தலைவனைநோக்கியே தாமருள்வார்.

வசனம்.

வெண்காட்டுநங்கையார் அடியாருக்கு மிகவன்போடு பரிகலம்வி ளக்கி வெண்மீயின் மேலேற்றிக் தூயவடிசிலும், பதார்த்த வகைகளும் ஐயரவர்களுக்குச் சமைத்த கறியினைத்தும் முக்கனிசர்க்கரை முதலிய

யாவும் படைத்த பின்னர் வைரவமூர்த்தியார் தொண்டரைப் பார்த்து இவைகளென்னவென்று கேழ்க்கச் சிறுத்தொண்டர் பணிந்து யெந்தையே யெனக்குகந்த தெனக்கூறுவார்.

---

ஆனந்தக்களிப்பு.

ஏழைக்குகந்தகறிகா ணீஸ்ரு
எந்தைநீருண்ணுங் கறியுண் யாவும்

வாழைவழுதலங்கறியா ம்-பின்னும்
வனைப்புடலைபீர்க்கை ளைமாங்காய்க் கறியாம்
கோழைபோ முரும்வண்டைக் கறியாம்-இளங்
கொத்தவரைக்கதரிக் கொம்புபாவற் கறியாம்

ஏழை.

ஐயாவவரைபின் கறியாம்-நல்ல
வமிர்தம்விட்டேசமைத்த வருஞ்சுரைக்கறியாம்
செய்யபூசினிக்காயின் கறியாம்-நல்ல
சேனையுருளைமற்றுஞ் சிலவகைக் கறியாம்

ஏழை.

மார்புசன்பாமிசக் கறியாம் யிது
மதுரமுள்ளவெலும்பு மணமுறுசெய்க் கறியாம்
போர்பெறுமீரலின் கறியாம்-அது
பெருங்குடல்சிறுகுடல் பிசைந்தநற் கறியாம்.

ஏழை-

---

வசனம்.

இப்படி தொண்டருரைத்ததைக்கேட்டு வைரவர் கூறுவார்.

---

கீர்த்தனம்-இராகம்-பியாகு-தாளம்-ஆதி.

பல்லவி.

நலக்கறியெதுகாணும் யெனக்கினிய
நலக்கறியெதுகாணும்

சரணங்கள்.

பலக்கறியோடும் படைத்திடா தேனே
பாலனையொளித்துவைத்த பண்பது சரிதானே

நலே.

மாலதின்மீது மங்கையர்க் கேது
சாலவிருந்தவள்காண் சரியோவிது தகாது

தலே.

ஆண்டிபவனுக் களியாதே யென்று
வேண்டியுரைத்தனையோ வேடிக்கை மிகநன்று

தலே.



விருத்தம்.

சிந்தைகலங்கிச் சிறுத்தொண்டர் மனையாளோடுந்
திகைத்தயர
சந்தனத்தாதொனுந்தாதியார்
தாமந்தத்தலையினைச்சி
வந்ததொண்டர் முதுசெய்யும்பொழுது
நினைக்கவருமென்று
முந்தவைத்தேன் கறியமுதென்றெடுத்துக்கொடுக்க
முகமலர்ந்தார்.

வசனம்.

வைரவராகிய வடியர் தலைக்கறி கேட்கின்றார் ஓமாதே என்செ
ய்வோம் பட்டதும் பலனில்லாமற் போயிற்றே அமுதுக் காகத்தனை
தாதியிடங்கொடுத் தெறிந்துவிடச் சொன்னேனே யெனத் தியங்
கிற்குந் தொண்டரைச் சந்தனநங்கையார் பணிந்து அடியார் சாப்பிடு
போது நினைக்க வருமென்று முந்திபானதைச் சமைத்தேனென்று
கொண்டுவந்து கொடுக்க முகமலர்ச்சி [illegible] டதனையேற்று வைரவரு
க்குப்படைத்தார் படைத்தபின் பக்தனை [illegible] ர்செய்வதற்கு யாதுமில்
லையேயென யோசித்தவராய் அப்பா தொண்டனே வென்போலவொ
ருவனை யழையுமெனப் புகலுவார்.

லாவணி.

கண்ணிகள்.

அப்பாகின்புகழ் தழைத்திடும் - யென்போ
லடியரொருவரின்னமழைத்திடும்
இப்பார்மிசையெந்த வெண்ணப்படி யமைக்க
வேலாதென்றவென்ற வெனககமு தளித்திட்ட

அப்பா.

நீறணிவோருடன் கூடியுண்ணு மெனது
நேமகமாதலே னொடிவர வழையும்

அப்பா.

தொண்டர்களிலெனைச் சொல்விடிலா விந்த
சோறதையுண்பது தோஷமிக வெனக்கு

அப்பா.

ஒண்டியொருவனுமா யுண்டிடவே யெனக்
குள்ளம்வராதிது கள்ளமல்லவே சொன்னேன்

அப்பா.

வசனம்.

இவ்விதமா யுரைத்த மொழியைக் கேட்ட சிறுத்தொண்டர் அடியவரைப்பார்த்து தயாநிதி பேதையேனை வருத்திஞ லென்செய்வே னெ றெண்டரொருவரையுங் காண்கிலேனென்று கூறுவார்.

லாவணி

கண்ணிகள்.

தொண்டரைக்காணேனே - யெந்தன்
றேன்றலென்செய் வேனே

## சிறுத்தொண்டநாயனார் சரித்திரக்கீர்த்தனை.

அண்டர்கள்பணி கோவே மெய்யினி
லாவணிந்திடு தேவே
யெண்டிசைதேடிய வெனக்கு நீ யருளிய
வெழிலடியவருண்ண விடையூ றிதுவோ
தொண்டனைக்.

அடியவரே யுண்ணும் வுண்ணாவிடி
லடிமையின்மனங் குன்றும்
படிமிசையோர புகழ் வைரவரேயெந்தன்
பாலில்லனமு வந்து பரிவுடனேயின்று
தொண்டனைச்.

நீறணிவரைக் கண்டி யானுந்திரு
நீறணிவது முண்டு
தாரணிதனி லடியார்கள் தட்டாமையாற்
றங்கோளாறிண்ணவே தமியேற்கருள்புரியும்
தொண்டனைக்



இ-ம்-இ-கா-பி-தாளம்-ஆதி.

பல்லவி.

ஈசனே - கயிலை - வாசனே

அநுபல்லவி.

தேசுலாவியநின் சீர்த்தி யல்லாது
சிறியேன்வாக்கு மற்றொன்றுஞ் சொல்லாது (ஈசனே)

சரணங்கள்.

அம்பிகைக்கினியோ யுன்னரு ளதனாலே
யடியாராகவந்தவ ரகமதை போலே
யிம்பருலகிலொவ்வா வெழிற்மணி செய்தும்
யேதோவாதுகளின்னி மிழைக்கிறீ ரோதும் (ஈசனே)

தேவதேவேயுனது செயலிது தானோ
தெரிவுளநாலுலகிற் சொலவரி யேனோ
மூவர்முதல்வனென மொழியவகிடு மூர்த்தி
மூண்டகன்றன்னுஞெங்கு மிலங்குதே கீர்த்தி (ஈசனே)

தாயுந்தந்தையுமிலாத் தன்மையி னேடும்
தாரணியிலிரந்துண்ணக் காத்தினி லோடும்
பேயும்பூதமுடனே யிருப்பது காடும்
பெருமையாயெங்குமேவ விருப்பதோர் மாடும் (ஈசனே)

உடுப்பதோதோற்கரி யுரியெனும் போர்வை
வுன்னைநடுக்குதன்றெ வுன்றிருச் சேர்வை
எடுப்பதோமழுமானும் புலியுடன் பாம்பும்
யிடத்திலும்வலதிலு மிடைவிடா தோங்கும் (ஈசனே)

தஞ்சமென்போர்கள்மீது சாற்றிடும் விருப்பு
சற்றேனுமில்லையெனச் சாட்சியே பொருப்பு
நெஞ்சிலுனக்கென்னேர மகலாத கறுப்பு
நித்தனுனக்குமுண்டோ விரக்கமென் சிறிப்பு (ஈசனே)

தாதனிடஞ்சம்பந்தஞ் செய்குண சாலி
தையனல்லாளோர மறைசொலு முழுநீலி
வோதரும்பிள்ளைகட்கு முனக்குமே ஜோலி
வுண்டென்றுரைப்பா ரெவருயர் திரிசூலி (ஈசனே)

ங்கரசுயம்புவென் றடியவர் தாழும்
சத்குணனேதரும வரமதில் வாழும்
ங்கரனையன்பணியும் பணிமதி யானே
பட்சம்வையாவிடிலோ விளிசகியேனே (ஈசனே)

---

விருத்தம்.

உம்மைப்போலநீறிட்டாருளரோ
வுண்பீரீரொன்று
செம்மைக்கற்பிற்றிருவெண்காட்
டம்மைதம்மைக்கலந்திருந்தி
வெம்மையிலாச்சிச்சோறதனின்
மீட்டுப்படையுமெனப்படைத்தார்
தம்மையூட்டவேண்டியவருண்ணைப்புகலூர்
தடுத்தருளி.

இதுவும்அது.

ஆறுதிங்களொழிந்துண்போ
முண்ணுமளவுந்தரியாது
சோறுநாளுமுண்பீர்முன்
னுண்பதென்னம்முடன்றுய்ப்ப
மாறின்மகவுபெற்றீரேன்
மைந்தன்றன்னையழையுமென
வீறுமுதலுமில்லாதார்க்
கிப்போதுதவானவனென்றார்.

வசனம்.

வைரவமூர்த்தி யாகிய வடியார் தோண்டரைப்பார்த்து அப்பா தொண்டனே பிள்ளையில்லாதவீட்டில் யான் புஜியேனெனச் சொல்லியதற்குச் சிறுத்தொண்டர் யெத்தனை விதத்திற்சொல்லியு கின்சித்த மிரக்கமில்லையே வெனக்கூறுவார்.



கீர்த்தனம்-இ-ம்-பசுபதிவர்த்தனம்-ஏகதாளம்.

கண்ணிகள்.

எத்தனைவிதத்திலுமக்கோதுவே ஞ
னெத்தனைவிதத்திலுமக்கோதுவேன்
ஏழைமீதி லேஞே வர்ம்ம ம்

எத்தனை.

புத்திரனில்லாதபெரும் பாவியோ-யார்க்கு
முற்றதுரைத்தால்நானென்ன கோபியோ
போதனேயதித நீத

எத்தனை.

வள்ளலேயப்பிள்ளையுதவா னையா-விது
கள்ளமல்லவெள்ளளவுங்கா ணையா
வாருங்கோபந்திரும் பாமி

எத்தனை.

சித்தமிரங்கிப்புஜியுஞ் சீலனே-யென
தத்தனுக்குகந்தவனு கூலனே
தீனனேமோன ஞானு

னத்தனே.




விருத்தம்.

நாமிங்குண்பதவன்வந்தா
ளுடியழையுமெனநம்பர்
தாமங்கருளிச்செயத்தரியார்
தலைவாமுறுசெய்தருள
யாமிங்கென்செய்தாலாகு
மென்பார்விரைவுற்றெழுந்தருளார்
பூமென்குழலார்தம்மோடும்
புறம்போயழைக்கப்புகும்பொழுது,

கீர்த்தனம்-இராகம்-முகாரி-அடதாளம்.

பல்லவி.

செய்யமணியே - செய்யமணியே-சீராளனென்னுஞ்
செல்வமே - குலச்செல்வமே-வாராய்.

செய்ய.

சரணங்கள்.

வையமுய்யுமடியார் தம்மோடுண்ணவே - இன்னே
வருந்தியழைக்கச்சொன்ன வார்த்தைகேளாத தென்னே
வள்ளலே யெங்கள் வள்ளலே வாராய்

சய்ய.

மாமாத்திரர்களது மரபைவிளக்க வந்த
மாசிலாதவனே யென்வார்த்தைகேளாத தென்னே
மாதவா யெங்கள் மாதவா வாராய்

செய்ய.

விருத்தம்.

பரமனருளாற் பள்ளியினின்
றோடிவருவான் போல்வந்த
தரமில்வனப்பிற் றனிப்புதல்வன்
றன்னையெடுத்துத் தழுவித்தங்
கரமுன்னணைத்துக் கணவனார்
கையிற்கொடுப்பக் களிகூர்ந்தார்
புரமூன்றெரித்தார் திருத்தொண்டருண்ணப்
பெற்றேமெனும் பொலிவால்.

வசனம்.

வைரவமூர்த்தியின் மொழியைக்கேட்டுக் கடவுளே யென்செய்வோம் அடியார் புசிப்பதற்கிதுவோ விடையூறொன்க் சிந்தித்துத் தொண்டரும் வெண்காட்டு நங்கையும் அகத்தின் புறத்துநின்று அடா அப்பனே யெனதாருயிர்த்துணையே செய்யமணியே சீராளா வாராய்வாராயென் றோலமிட்டழைக்கயில் பரமசிவத்தருளாற் பள்ளியினின்றோடி வருபவனைப்போல பாதச்சதங்கை கிண்கிணி நூபுரமுதலிய யாவுமொலிக்க வோடிவருவதைக்கண்டு தாயாகியவெண்காட்டுநங்கையார் வாரித்தழுவி முத்தமிட்டு வுச்சியைமுகந்து கணவனிடங்கொடுக்கக் கணவனாகிய தொண்டனார் சந்திருஷ்டியடைந்துத் திருத்தொண்டருண்ணப்பெற்றோ மெனு மாவலோடு வீட்டிற்சென்று பார்க்கயில் அடியரில்லாமையால் அகத்ினும் புறத்தினுந்தேடி மிகவியாகூலத்தோடேங் கூறுவார்.

லாவணி.

கண்ணிகள்.

மனனுஞ்சிறுவனைச் சென்றழைத்திடுமென்ற வன்பர்
மனாந்தனரொன்செய் வேனே
மாதவமேயுமது சோதனையோ வடிமை
மனதெவ்விதமுய் வேனே

வைரவமூர்த்திபோல் வந்தவடிய ரது
பான்மையொன் றறியேனே
பாசமகலக்கண் பாராவிடிலோ சகியேன்
பண்பிலாச் சிறியேனே

அகத்தினும்புறத்தினுந் தேடியுங் காண்கிலே
னையவென்செய் வேனே
யாவலுடனளித்த வமுதருந்தா விடிலோ
வகமிகநை வேனே

இலையிலிருந்தகறி யனைத்துமொளித்த வித
மெவ்வணந்தெரி யேனே
யீகையிலாநெஞ்ச னாயினும் நீதியோ
விளைத்திடும் பெரி யோனே



விருத்தம்.

தனிவெள்விடைமே னெடுவிசும்பிற்
றலைவர்பூதகணநாதர்
முனிவரமரர் விஞ்சையர்கள்
முதலாயுள்ளோர் போற்றிசைப்ப
இனியகறியுந் திருவமுது
மமைத்தார்காண வெழுந்தருளிப்
பனிவெண்டிங்கண் முடிதுளக்கப்
பரந்தகருணைநோக்களித்தார்.



இ-ம்-உசேனி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

சந்திரசூடாதர சங்கரனே யரனே- ஓ மனோஹரா
சத்துச்சித்தானந்த மாகிய தற்பரனே

கந்தமலர்க்குழலாள் மகிழ் கண்ணியனே- ஜடாசேகரா
காதலுறு மடியார்க்கருள் புண்ணியனே

மன்னுமழைவிடையேறிய வானவனே-ஓ மஹேராஹரா
மண்ணொடுவிண்ணு மனைத்துமானவனே

அன்பரக்கமலத்துறை மற்புதனே-ஓ மஹேராஹரா
அம்பலத்தாடியென் றேத்திடும்பொற்பதனே

செப்பற்கருந் திரிபுர மெரித்தவனே-ஓ மஹேராஹரா
செஞ்சடையிற்கொன்றை திங்கள்தரித்தவனே

பன்னற்கரும்பொருளாகும் பராபரனே-ஓ மஹேராஹரா
பகைாருபத்தன் பணியுங் கிருபாகரனே

---

கீர்த்தனம்-இ-ம்-அமீர்கல்யாணி-தாளம்-மிசுரம்.

பல்லவி.

சர்வஜீவதயாபரா - சம்போஹராஹர

அநுபல்லவி.

நிர்ம்மலாசரணம் - நீதியே சரணம்
நேடியேவடிமை - கொண்டவா சரணம்
சர்வ.

சரணங்கள்.

தமியனேற்கருளத - தருணமிது நல்ல
தாண்டவம்புரியுந் - தாயகா புவன
சர்வ.

அடியாராகிவந்த - தறிவனோ சிறியேன்
ஆருந்தேடரிய - வத்தனே யபயம்
சர்வ.

படியுளோரெவரும் - பரவும் புநிதனே
பாபியேனைக்கண் - பாராவிடிற் சகியேன்
சர்வ.

---

வசனம்.

இவ்விதமாய் சிறுத்தொண்டர் ஆகாயவீதியில்நின்ற சந்திரசடா
ர்த்தியையு மற்றுமுள்ள விருஷீஸ்வரான் முநீஸ்வரான் கருட

காந்தருவர் சித்தவித்தியாதர ரூகராகாயவாசிகளாகிய தேவர்களனை
வருந் தேவதுந்துமிமுழக்கி மலர்மாரித் தூவிப்போற்ற வெண்காட்டு
நங்கை சந்தனநங்கை சீராளனிவர்களோடும் புட்பகவிமானத்தேறி
மேஷமாதம் பரணிநட்சத்திரம் அமாவாசையாகு மிச்சுபதினத்தில்
கயிலைப்பதியடைந்தாரெனச் சேக்கிழார் பெரியபுராணத்திற் றிருவா
ய்மலர்ந்தருளியதை யறிவிலேனாகிய யானஞ் ஞானத்தாற் கீர்த்தன
பாகப் பகர்ந்தமையாற் பெரியோர்களங்கீகரிக்க வஞ்சலிக்கின்றேன்

## மங்களம்

கீர்த்தனம்-இ-ம்-கானடா-தாளம்-ஆதி.

பல்லவி.

மாமாத்திரர்கள் - மறபிலவதரித்த
மருவேமலரே மங்களம்

அநுபல்லவி.

சோமசுந்தரர்க்குச் சுதனைச்சமைக்க வந்த
சுகுணரஞ்சிதமே மங்களம

மாமாத்.

சரணங்கள்.

செங்காட்டுறைந்தஜோதிநுங்கு சிவனடியார்
பங்கா பவந்துதே மங்களம்
கங்காதரனுக்கு மங்காதிசைந்த நிஷ்க
ளங்காபவந்துதே மங்களம்

மாமாத்.

அண்டாமூவுலகினி லுண்டாகின்போலொருவ
ருண்டாபவந்துதே மங்களம்
கண்டார்கலியும்விட மூண்டான்மகிழுஞ் சிறுத்
தொண்டாபவந்துதே மங்களம்

மாமாத்.

மூத்தாமூவர்புகழுஞ் சித்தாவரிய மோன
வித்தாபவந்துதே மங்களம்
பத்தனருணாசல னித்தர்துதித்திடும் ப்ர
சித்தாபவந்துதே மங்களம்

---

சிறுத்தொண்டநாயனார் சரித்திரக்கீர்த்தனை.

முற்றும்.

முற்றுப்பெற்றது.

